# ஏப் லிங்கன்

## புத்தகங்களை நேசித்த சிறுவன்

ஆசிரியர் **கே வின்டர்ஸ்**

படங்கள் நான்சி கார்பென்ட்டர்

தமிழில் குமரேசன் முருகானந்தம்



# ஏப் லிங்கன்

## புத்தகங்களை நேசித்த சிறுவன்

### கே விண்டர்ஸ்



படங்கள் நான்சி கார்பென்ட்டர்

தமிழில் குமரேசன் முருகானந்தம்

லிங்கனை எப்போதும் நேசித்த மார்கரட் விண்டர்ஸுக்கு.

— கே விண்டர்ஸ்

புத்தகங்களை நேசிக்கும் பெவில்-கில்ஸ் குடும்பத்தினற்கு

**— நான்சி கார்பென்ட்டர்**

நுட்பம் மிக்க ஆசிரியரான ஜெசிகா ஷுல்டேவுக்கு சிறப்பு நன்றி.

— கே விண்டர்ஸ் .

**கென்டகி**யின் காடுகள் நிறைந்த பகுதியில்
ஆண் குழந்தை ஒன்று பிறந்தது.
அவனது தாயார் அவனை **ஏப்ரகாம்** என்று அழைத்தார்,
அவனது குடும்பப் பெயர் *லிங்கன்*.
அவனது படுக்கை சோள உமிகளைக்கொண்டு செய்யப்பட்ட ஒன்று.
அவனது உடைகள் கரடிகளின் தோல்களைக்கொண்டு செய்யப்பட்டது.
அவனது அறை, உயர்ந்து வளர்ந்த மரங்களின் மரப் பலகைகளால் கட்டப்பட்டிருந்தது.


ஏப் அந்த ஒற்றை அறை வீட்டில்
தான் தனது முதல் வார்த்தைகளை
பேசத் தொடங்கினார்,
அந்த கடினமான அழுக்குத்
தரையில் தான் தனது
முதல்அடியை எடுத்து வைத்து
நடக்கப் பழகினார்.
ஒரு விறகடுப்பு தான் குளிரை
விரட்டவும் சோள ரொட்டியை
சமைக்கவும்
உதவியது.
அறையின் கதவு தோலாலான
கீல்களால் திறந்து மூடியது,
மேலும் ஒரு சிறிய சாளரம்
அவரது வெளி உலகைக்
காட்டியது.



அவர் இரண்டு வயதாக இருந்தபோது, அவரது குடும்பம் தங்களது சில பொருட்களை மூட்டை கட்டிக்கொண்டு, **ஏப்** மற்றும் சகோதரி **சாரா**வுடன் **நாப் கிரீக்**கிற்கு இடம்பெயர்ந்தது.

**கம்பர்லேண்ட் டிரெயில்** எனும் மலை வழித் தடம் அவர்களின் புதிய வீட்டிற்கு அருகில் சென்றது. அத்தடத்தில் சிறு வியாபாரிகள், முதற்குடிகள், அரசியல்வாதிகள், வர்த்தகர்கள், அடிமைகள் கடந்து செல்வதை **ஏப்** கண்டார். வளர வளர, அவர் பயணிகளுடன் பேசலானார்--- அவர்கள் எங்கே இருந்தார்கள், அவர்கள் எங்கே போகிறார்கள் என்பதைத் தெரிந்துகொண்டார். அவர்களுடைய உலகம் தனது உலகத்தை விட பரந்ததாக இருந்ததை அவர் கண்டார். அவரது சிந்தனைகள் விரிவடைந்தன. அவரது கேள்விகள் எழுச்சியுற்றன. அவரது கனவுகள் தூண்டப்பட்டன.

பள்ளியில் அவர், ஒன்று முதல் பத்து வரையான எண்களைக் கற்றுக் கொண்டார். A முதல் Z வரையான எழுத்துக்களை கரிக் கட்டையால் எழுதினார்.



அவர் பள்ளியிலும், வீட்டிலும். நாள் முழுவதும், அவற்றை எழுதிப் பழகினார்,





தூசியின் மீதும், பனியிலும், மரக்கட்டைகள் மீதும். எழுத்துக்களை எழுதினார் அவை ஒரு மாயாஜாலம் போல் அவரை மயக்கியது. அவருக்கு கற்றுக் கொள்ளும் ஆர்வம் அதிகரித்தது.

அவரது பெற்றோருக்கு
பள்ளிப்படிப்பு இல்லை. ஆனால் ஒரு
நாள் பொழுது முடிந்ததும்,
குடும்பத்தினர் கணப்படுப்பின்
அருகில் அமர்ந்தனர், அவரது
தாயார் தான் மனப்பாடமாகத்
தெரிந்து வைத்திருந்த பைபிள்
கதைகளை சொல்லுவார். அவரது
தந்தை, நூல் நூற்றியபடி
நகைச்சுவைகளைச்
சொல்லி அவர்களை
சிரிக்க வைத்தார்.



ஏப்க்கு ஏழு வயதாக இருந்தபோது,
குடும்பம் மீண்டும் குடிபெயர்ந்தது. அவர்கள்
டிசம்பர் மாதம் காலையில் புறப்பட்டனர்,
அவர்களின் தட்டுமுட்டுச் சாமான்கள்
இரண்டு பருமனான குதிரைகளில்
ஏற்றப்பட்டன.

அவர்கள் நூறு மைல் தூரம் நடந்தும்
குதிரைகள் மீது சவாரி செய்தும் இன்டியானா
சென்றடைந்தனர்.

ஒரு தற்காலிக கட்டுமரத்தில் ஓஹியோ ஆற்றைக்
கடந்தனர். அவர்கள் தரையிறங்கி இறுதியாக ஓர்
இடத்தை தங்களுடையதாக ஆக்கிக்கொள்ளும் வரை
மரங்கள் மற்றும் சிக்கலான கொடிகள் அடர்ந்த காடுகள்
வழியாக ஒரு பாதையை ஏற்படுத்த
அவற்றை வெட்டி அகற்றுவதில் ஏப் தனது தந்தைக்கு
உதவினாக இருந்தார்.

**சிறிய பீஜியன் க்ரீக்**கில் சுவற்றால் மறைக்கப்பட்ட எந்த அறையும் காத்திருக்கவில்லை. அதற்குப் பதிலாக அவர்கள் தங்க வேண்டிய முகாமில் மூன்று பக்கம் மரக்கிளைகள், குச்சிகள், சருகுகள், மற்றும் மரக்கட்டைகளால் ஆன சுவர்களற்ற இடம் தான் இருந்தது. அகலமான ஒரு பக்கம் வனாந்தரத்திற்கு திறந்து கிடந்தது. மக்கள் மரக்கட்டைக் குவியலை அடுக்கி தீயிட்டு வைத்திருந்தார்கள். அது சுற்றித் திரியும் காட்டு விலங்குகளை அச்சுறுத்துவதாக இருந்தது. கரடிகள் உறுமின, ஓநாய்கள் ஊளையிட்டன, சிறுத்தைகள் கூச்சலிட்டது. **ஏப்** பயந்து நடுங்கினார். இரவு நேரம் அச்சமளிப்பதாக இருந்தது.



ஏற்கனவே அங்கே குடியேறியவர்கள் இந்த குடும்பத்திற்கு ஒரு வீட்டைக் கட்டுவதில் உதவி செய்தனர். இப்போது **ஏப்**க்கும் **சாரா**வுக்கும் தங்களுடையது என்று சொல்லிக்கொள்ள ஒரு பரண் கிடைத்தது. **ஏப்** தனது தூங்கும் பரணிற்கு ஏறுவதை விரும்பினார். ஆனால் பனியும் காற்றும் சுவரின் விரிசல்கள் வழியாக அறையின் உள்ளே வீசின. வெளிப்புறம் நிலவிய குளிர் வீட்டின் உள்ளும் நுழைந்து சுவர்களை ஐஸ் போல சில்லென்று ஆக்கியது.

ஒரே ஒரு முறை ஏப் அந்த காட்டுப்பகுதியில் ஒரு வான்கோழியை சுட்டு வீழ்த்தினார். ஆனால் மீண்டும் அந்த தவறை செய்யவில்லை.

உயிருள்ளவற்றை இனி கொல்லமாட்டேன் என்று அவர் உறுதிபூண்டார்.

ஏப்க்கு எட்டு வயதாக இருந்தபோது, அவர்களின் நிலத்தை சுத்தம் செய்வதற்கு அவர் தனது தந்தைக்கு உதவியாக இருந்தார். கோடாரியை வீசக் கற்றுக் கொண்ட அவர், மரங்களை வெட்டி சாய்த்தார். எனினும் அவர் புத்தகங்களிலிருந்து கற்றுக்கொள்ளவும், மீண்டும் பள்ளிக்குச் செல்லவும் ஏங்கினார்.

ஏப் ஒன்பது வயதை அடைந்தபோது, கடுமையான
துரதிர்ஷ்டமான காலம் அவர் மீது கவிழ்ந்தது.
விஷப்பால் நோயினால் அவரது தாய் மரணம்
அடைந்தார். தாயின் பைன் மர சவப்பெட்டியில்
பொருத்த முளை ஆப்புகளை ஏப் செதுக்கினார்,
அவர் மிகவும் ஆழ்ந்த துக்கத்தில் இருந்தார்,
அதனால், தாயின் பெயரைக் கூட அவரால்
உச்சரிக்க  முடியவில்லை.

ஒரு வருடம் மந்தகதியில் கழிந்தது. அவரது தந்தை மறுமணம் செய்துகொள்ள பெண் தேடிச் சென்றார். அவர் மூன்று குழந்தைகளுடன் ஒரு விதவையை திருமணம் செய்து அழைத்து வந்தார். மிகவும் பரந்த மனம் கொண்ட அப்பெண் **ஏப்**பையும் **சாரா**வையும் தனது சொந்த பிள்ளைகளாக பாவித்தார்.



அப்பெண் தன்னுடன் புத்தகங்களையும் கொண்டு வந்திருந்தார்!

வேலைகள் முடிந்ததும் **ஏப்**பை வாசிக்க அனுமதித்தார். மீண்டும் மரக்கட்டைகளால் ஆகிய அவர்களின் கூடு ஒரு வீடாக மாறியது.

அவர் குழந்தைகளை மீண்டும் பள்ளிக்கு அனுப்பினார்.

**ஏப்** மான் தோல் மற்றும் ரக்கூன் தோலினால் செய்யப்பட்ட மிகவும் குறுகிய தொப்பியை அணிந்திருந்தார்.

அவர் தனது மடல்களை டர்க்கி- பஸார்ட் எனப்படும் ஒரு வகை கழுகின் சிறகைக்கொண்டு வரைந்தார்.

"ஆபிரகாம் லிங்கனின் கையெழுத்தாலும், எழுத்தாற்றலாலும் அவர் சிறப்பாக வாழ்வார், ஆனால் எப்போது என்று கடவுளுக்குத்தான் தெரியும்."

அவர் கூட்டல், கழித்தல் போன்றவற்றை மரப்பலகைகளில் செய்து பார்த்துக் கற்றுக்கொண்டார். அனைத்திற்கும் மேலாக அவர் வாசிப்பதையும் எழுத்துக்கூட்டுப் போட்டியில் வெற்றி பெருவதையும், நூல் நூற்பதையும், கதைகள் சொல்வதையும் மிகவும் நேசித்தார்.





பள்ளி விடுமுறை விடப்பட்டபோது அவர் விவசாயிகளுக்கு கூலி வேலை செய்ய அனுப்பப்பட்டார். அவரது தந்தையார் சம்பாத்தியத்தை குடும்ப செலவுக்காக வைத்துக்கொண்டார். ஏப் மரங்களை பிளப்பது, கிணறு தோண்டுவது, மரம் வெட்டுவது போன்ற வேலைகளைச் செய்தார். ஆயினும், வேலை செய்யும் போதெல்லாம் கற்றுகொள்ளவே விரும்பினார். "நான் தெரிந்து கொள்ள விரும்பும் விஷயங்கள் அனைத்தும் புத்தகங்களில் உள்ளன" என்று அவர் சொல்வதைக் கேட்க விருப்பமுள்ள எவருக்கும் கூறினார்."











ஒருமுறை அறையின் கூரை வழியாக மழைநீர் ஒழுகி அவர் கடன் வாங்கியிருந்த ஒரு புத்தகத்தை நனைத்துவிட்டது. அவருக்கு திருப்பிக் கொடுக்க, கோடையில் மூன்று நாட்கள் ஏப் தனது நண்பரின் வயலில் சோளத் தண்டுகளை அறுக்கும் வேலை செய்தார்.

**ஏப்** நிலத்தில் உழவு செய்யும் நேரங்களில் ஒரு புத்தகம் எப்போதும் அவரோடு கூடவே இருந்தது. ஒவ்வொரு வயலை உழுது முடித்ததும் அவர் அதை எடுத்து வாசிப்பார். அடுத்த வயலில் மீண்டும் வேலையைத் துவங்கும் வரை அவருடைய குதிரைகள் காத்து நின்றன. அக்கம்பக்கத்தார் ஆட்சேபிக்கும் விதத்தில் தலையசைத்து அவரை சோம்பேறி என்றழைத்தனர்.

எப்போதும் புத்தகமும் கையுமாக இருக்கும் அந்தச் சிறுவனை அவர்கள் புரிந்துகொள்ளவேயில்லை, **ஏப்** அந்த வனப்பகுதியிலிருந்து வெளியேற வேண்டும் என்று அறிந்தார். மரங்களைப் பிளப்பதும் நிலத்தை உழுவதும் அவரது கனவாக இருந்ததில்லை.




தனது பத்தொன்பதாம் வயதில், நீண்ட கழி கொண்டு செலுத்தப்படும் தட்டையான படகு ஒன்றின் மூலம் ஆற்றில் பயணப்பட்ட அவர், காட்டிற்கு வெளியே உள்ள இடங்களையும், மனிதர்களையும் கண்டார். கருப்பு நிற ஆண்கள், பெண்கள் மற்றும் அவர்களின் குழந்தைகள் சங்கிலிகளால் கட்டப்பட்டிருப்பதைக் கண்டார். அங்கு, தலைக்கு மேல் உயரத்தில் அரு அறிவிப்புப் பலகையில் AUCTION BLOCK (ஏலப் பகுதி) என்று எழுதப்பட்டிருந்தது.

கைக் கோடா,ரி
பெரிய கோடாரி,
கலப்பைப் போன்று
ஒரு உயிருள்ள
மனிதரும் விற்பனைக்கு
இருப்பதைக் கண்டார்.

ஒருவர் மற்றொருவரை
விற்பனையின் மூலம்
சொந்தமாக்கிக்கொள்வது அநீதி
என்று **ஏப்** அறிந்திருந்தார்.

**இல்லினாய்ஸில்** உள்ள **நியூ சேலம்** பகுதியில் **ஏப்** குடியேறினார். அந்த இடத்தில்  சுமார் நூறு குடும்பங்கள் வசித்து வந்தன! அவர் பலசரக்குக் கடை ஒன்றில் வேலைக்கு சேர்ந்தார்.

ஒருமுறை அவர் யாரிடமோ ஆறு சென்டுகள் கூடுதலாக பணம் வாங்கிவிட்டார். ஆனால், "நேர்மையான **ஏப்** " அதைத் திரும்ப கொடுத்துவிட வேண்டி பல மைல்கள் நடந்து சென்றார் என்று மக்கள் கூறினார்கள்,



இங்கும், ஏப் தனது திறமையை புத்திகூர்மைக்கு பதிலாக, உடல் வலிமையால் நிரூபிக்க வேண்டுமாறு கேட்டுக்கொள்ளப்பட்டார். ஏப்பின் கடை உரிமையாளர் ஒரு முரட்டுத்தனமான ரௌடி கும்பலின் தலைவனுடன் மோதும்படியாக ஒரு மல்யுத்த போட்டியை ஏற்பாடு செய்தார். தயக்கத்துடன், ஏப் ஜாக் ஆம்ஸ்ட்ராங்கை எதிர்கொண்டார், ஏப் ஜாக்கை கீழே தள்ளி நகரவிடாமல் செய்தார் என்றார்கள் சிலர், மற்றவர்கள் ஆம்ஸ்ட்ராங் தந்திரமாக ஏப்பைத் தோற்கடித்தார் என்று உறுதியாகக் கூறினர்.







ஆனால் ஏப்பின் வலிமையைக் கண்ட ஜாக், ஏப்புடன் கை குலுக்கினார். பின்நாட்களில்அவர்கள் இருவரும் நெருங்கிய நண்பர்களானார்கள்.



திரி விளக்கின் வெளிச்சத்தில், ஆசிரியர் எவரும் இல்லாமலேயே அவர் சட்டப் படிப்பு படித்தார். விரைவிலேயே அவர் நீதிமன்றங்களில் வழக்கறிஞரானார். பேச்சால் ஒரு மனிதனை விடுவிக்கவோ சிறையிலடைக்கவோ முடியும் என்று **ஏப்** தெரிந்து கண்டார். பேச்சு மக்கள் சிந்திக்கும் விதத்தை மாற்றக்கூடும் என்பதை அவர் புரிந்து கொண்டார்.



அரசியல் அவரை ஈர்க்கத் தொடங்கியபோது, **ஏப்** தான் சரிசெய்ய நினைக்கும் தவறுகளை தனது வார்த்தைகளுக்கு இலக்காக்கினார். அவர் அதிகாரமுள்ள அரசு பதவிக்கு போட்டியிட வேண்டும் என்று நண்பர்கள் கூறினார்கள்.



முதலில்அவர் காங்கிரசுக்கும், பின்னர் செனட் சபைக்கும் போட்டியிட்டார். கடைசியாக அவர் நாட்டின் மிக உயர்ந்த பதவிக்குப் போட்டியிட்டார்.

ஆபிரகாம் லிங்கன் -----

மரப்பலகைகளால் கட்டப்பட்ட ஒற்றை அறைகொண்ட வீட்டில் பிறந்தவர். அமெரிக்க எல்லையில் குடியேறியவர்களின் குழந்தை, எப்போதும் புத்தகம் வாசிப்பதில் மூழ்கியிருந்தவர் – அமெரிக்காவின் பதினாறாம் அதிபராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்! வனாந்தரத்திலிருந்து வெள்ளை மாளிகைக்குச் சென்றவர். அவர் சொற்களின் வலிமையை கற்றுக் கொண்டதோடு, அவற்றை நன்கு பயன்படுத்தவும் செய்தார்.



# ஆசிரியர் குறிப்பு

**ஆபிரகாம் லிங்கன்** 1809 ஆம் ஆண்டு, நாட்டின் எல்லைப் பகுதி குடியேறிக் குடும்பத்தில் **நான்சி** மற்றும் **தாமஸ் லிங்கனுக்கு** பிறந்தார். அவரது முறையான கல்வி ஒரு வருடத்திற்கும் குறைவானதாகும். அவரது தாயால் அவர் வாசிக்க ஊக்குவிக்கப்பட்டார். ஆனால் அவருக்கு ஒன்பது வயதாக இருந்தபோது, **நான்சி** விஷப்பால் நோயால் இறந்தார், அது விஷத்தன்மையுள்ள **நாகசுவந்தை** எனும் விஷச்செடியை சாப்பிட்ட பசுவின் பாலைக் குடிப்பதால் ஏற்படும் ஒரு நோயாகும். பின்னர், ஒரு வருடம் கழித்து, **ஏப்** மற்றும் அவரது சகோதரி **சாரா**வுக்கு மாற்றாந்தாயாக இருக்க தனது புது மனைவியை **தாமஸ்** வீட்டிற்கு அழைத்து வந்தார்.

அவ்வாறு வந்த அவர், **ஏப்**க்கு மகிழ்ச்சியளிக்கும் வகையில் புத்தகங்களுடன் வந்தார்! **ஏப்** ஒரு இளைஞனாக வளர்ந்தபோது, வார்த்தைகள் எவ்வளவு சக்திவாய்ந்தவை என்பதை உணர்ந்தார், மேலும் அவர் உரைகள், விவாதங்கள் மற்றும் தனது விளக்கக்காட்சிகளுக்காக எழுதுவதில் மணிக்கணக்கில் செலவிட்டார்.

1842 இல், அவர் **மேரி டாட்** என்ற பெண்மணியைத் திருமணம் செய்து கொண்டார், அவர்கள் **ராபர்ட்**, **எட்டி**, **வில்லி** மற்றும் **டாட்** ஆகிய நான்கு ஆண் குழந்தைகளைப் பெற்றனர். **எட்டி**யும் **வில்லி**யும் குழந்தைப் பருவத்திலேயே இறந்துவிட்டனர், அது **லிங்கன்** தம்பதிகளை பெரும் சோகத்தில் ஆழ்த்தியது.

1847 இல் **ஏப்** அமெரிக்க பாராளுமன்றமான காங்கிரசில் தனது இரண்டு ஆண்டு பதவிக்காலத்தை தொடங்கினார். பின்னர் அவர் அரசியலை விட்டு வெளியேறி தனது சட்ட தொழில் வாழ்க்கையில் கவனம் செலுத்தினார். ஆனால் மாநிலங்கள் ஆழமாக பிளவுபட்டிருந்தன; அடிமைமுறை பிரச்சினை கொதித்துக் கொண்டிருந்தது. **லிங்கனால்** வாளாவிருக்க முடியவில்லை. அவர் செனட் பதவிக்கு போட்டியிட்டார். அவர் இரண்டு முறை தோற்றார், ஆனால் அவர் தனது முயற்சியைக் கைவிடவில்லை. அவரது பேச்சுகள் மேற்கோள் காட்டப்பட்டன, அவரது கருத்துக்கள் விவாதிக்கப்பட்டன, அவர் தேசிய அளவில் அறியப்பட்டார்.

1860 ஆம் ஆண்டில், அவர் அமெரிக்காவின் பதினாறாவது அதிபராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். நமது வரலாற்றில் மிகவும் குழப்பமான காலங்களில் ஒன்றான உள்நாட்டுப் போரின் போது அவர் தனது நாட்டிற்காக சேவை செய்தார். இந்த இருண்ட காலக்கட்டத்தில், ஒன்றியத்தை பாதுகாக்கும் போராட்டத்திற்குத் தலைமை தாங்கினார்.

ஜனவரி 1, 1863 அன்று, அவர் **விடுதலை பிரகடனத்தை*** வெளியிட்டார், அது கூட்டமைப்புப் பகுதிகளில் கலகத்தில் ஈடுபட்டிருக்கும் அடிமைகள் விடுதலைப் பெற்றவர்களாக அறிவித்தது.

**லிங்கன்** 1864ஆம் ஆண்டில் மீண்டும் அதிபராக தேர்ந்தெடுக்கப்பட்டார், ஆனால் 1865 ஆம் ஆண்டு ஏப்ரல் 14ம் தேதி, ஃபோர்டு தியேட்டரில் **ஜான் வில்கிஸ் பூத்** என்பவரால் சுடப்பட்டார். மறுநாள் லிங்கன் இறந்துவிட்டார், அவரது போர் செயலாளர் எட்வின் ஸ்டாண்டன் கூறுகையில் “இப்போது அவர் காலத்தை கடந்து நிலைத்துவிட்டவர்.” என்றார்.

இன்று லிங்கனின் முகம் எங்கள் நாணயங்களில் பிரகாசிக்கிறது அவரது உருவம் லிங்கன் நினைவகத்தில் ஆழ்ந்த அமைதியுடன் காணப்படுகிறது, அவரது வார்த்தைகள் தேசபக்தியைக் கொண்டாடும் சந்தர்ப்பங்களில் ஒலிக்கின்றன. **லிங்கனால்** நமக்கு ஒன்றுபட்ட அமெரிக்கா கிடைத்திருக்கிறது, எந்த ஒரு குடிமகனும் மற்றொருவருக்கு அடிமையானவர் இல்லை. **ஆபிரகாம் லிங்கனின்** புத்தகங்களின் மீதான நேசம், அவை தூண்டிய கருத்துக்கள், மேலும் அழகான, பயனுள்ள மற்றும் நம்பத்தகுந்த முறையில் அவர் தனது பேச்சாற்றலைப் பயன்படுத்தியது போன்றவை நமது தேசத்தை விடுதலைப் பாதையில் அழைத்துச்சென்றது. நாம் அதில் மேலும் பயனிக்கிறோம்.

*விடுதலை பிரகடனம் என்பது வழக்கமான சொல்லாடல் முறையில் ஒரு சட்டம் அல்ல. அது காங்கிரசால் நிறைவேற்றப்படவில்லை, அது போர் காலத்தில் அறிவிக்கப்பட்ட அதிபதியின் ஒரு பிரகடனம்.

# தேர்ந்தெடுத்த நூல்தொகுப்பு


1. Donald, David Herbert. *Lincoln*, New York; Simon & Schuster, 1996.
2. Freedman, Russell, *Lincoln: A Photobiography*; New York, Clarion Books, 1987.
3. Harness Cheryl, *Young Abe Lincoln*: *The Frontier Days*, 1809-1837; Washington D.C, National Geographic, 1996.
4. Sandburg, Carl, *Abraham Lincoln: The Prairie Years and the War Years*, New York: Harcourt Brace, 1926.
5. Warren, Louis, *Lincoln's Youth: Indianapolis*, Indiana Historical Society, 1991.

# கே வின்டர்ஸ்

படங்கள் நான்சி கார்பென்ட்டர்

தமிழில் குமரேசன் முருகானந்தம்

